# தமிழ்ச் சுவடிகள் விவரச் அட்டவணை

## தொகுதி 29



பதிப்பாசிரியர் :

ச. தியாகராாசன், எம்.ஏ., எம்.ஏ., பி.எல்.

பொதுப்பதிப்பாசிரியர் :

நடன. காசிநாதன், எம்.ஏ.

அ.கீ.சு.நூலக வெளியீடு : எண்: 406
தமிழ்நூல் வெளியீடு : எண்: 110

# தமிழ்ச் சுவடிகள் விவர அட்டவணை



## தொகுதி - 29

## R.8781 - 8906

பதிப்பாசிரியர்:

ச. தியாகராாசன், எம்.ஏ.பி.எல்.,
தமிழ்ப் புலவர்
அ.கீ.சு. நூலகம்
சேப்பாக்கம்
சென்னை 600 005.

பொதுப் பதிப்பாசிரியர்:
நடனகாசிநாதன், எம்.ஏ.,
இயக்குநர்
தொல்பொருள் ஆய்வுத்துறை
சென்னை 600 113

G.O.M.L. Publication No.:406
Tamil Publication No.:110

# DESCRIPTIVE CATALOGUE OF THE TAMIL MANUSCRIPTS

## VOLUME 29

## (R.8781 - 8906)

**Editor**

**S. THEAGARAJAN**, M.A.B.L.,
Tamil Pandit, Government Oriental Manuscripts Library,
Chepauk, Chennai 600 005.

**General Editor**

**NATANA KASINATHAN**, M.A.,
Director, Department of Archaeology,
Chennai 600 113.

G.O.M.L.

1997

Price : **74.00**

# காப்பாட்சியர் முன்னுரை

அ.கீ.சு. நூலகத்தில் பாதுகாக்கப்பட்டு வரும் தமிழச் சுவடிகள் உலகப்புகழ் பெற்றவை. உலகெங்கிலும் உள்ள தமிழ் ஆராய்ச்சியாளர்கள் நாள்தோறும் அ.கீ.சு. நூலகத்திற்கு வந்து பயன் பெற்றுச் செல்கிறார்கள்.

அச்சு நூற்களை மட்டும் ஆய்வுசெய்வதோடு நிறுத்தாமல், தொடர்புடைய சுவடிகளையும் ஆயும் ஆய்வுநெறி தமிழகத்தில் இன்னும் ஏற்படவில்லை. இந்நிலை ஏற்படவேண்டும். இதற்கு வசதியாகவே, இதுபோன்ற சுவடி விவர அட்டவணைகள் வெளியிடப்படுகின்றன.

இத் தொகுதியில் பல அச்சிடப்படாத சுவடிகளும் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

தமிழ் எழுத்துமுறை, தமிழ் எழுத்துச்சாதன முறை, தமிழ் நூல் வரலாறு, போன்ற எண்ணற்ற ஆய்வுகளுக்கு நிலைக் களனாக இருப்பது ஓலைச்சுவடியாகும்.

எனவே, இத்தகு சுவடிகளை அறிமுகப்படுத்தும் இதுபோன்ற விவர அட்டவணைகளும் வரவேற்கத்தக்கனவே.

இவண்,
முன்னவர் சு. சௌந்தரபாண்டியன்,
எம்.ஏ.(தமிழ்). எம்.ஏ.(ஆங்). பி.எட்., டிப்.வ.மொ, பிஎச்.டி
காப்பாட்சியர்,
அ.கீ.சு. நூலகம்,
சென்னை 600 005.

# The Smell of Lemon Grass....

Catalogues of G.O.M.L. are really a fountain of knowledge. Wherever you lay your land, you will touch upon a wonderful piece.

Many rare works have been described here which will be very useful for making plans of various researches.

Marundu Sei Muraigal, Manu Neethi Chozhan Nadagam Ibrahim Padaippor etc. are conspicuous.

Studying a palmleaf manuscript is not an easy joke. So, this volume minimises scholars' pains in understanding what is what at the outset.

Manuscripts have been actually worshipped at homes. Even today people are worshipping manuscripts of scriptures. So, this shows how our ancient Tamils had preserved our tradition of writing manuscripts.

The method of paging as we have in printed books today was the practice of our ancient Tamil people who were paging their palmleaf manuscripts' folio continuously without leaving a single page. Today the whole world follows our Tamil method. We have Tamil MSS paged without a single missing throught some 300 to 400 leaves in one and the same budle. Bundle of energy must have been spent for the writing and keeping of palmleaf manuscripts.

When one refers to the page of this catalogue he will be certainly taken back at the sight of some interesting titles.

I thank Thiru.Natana. Kasinathan, M.A., Director, Department of Archaeology, Chennai 600 113 for his plan regarding this publication.

**Dr. S.Soundarapandian,**

M.A., M.A., B.Ed., Dip. Skt., Ph.D.

Curator

G.O.M.L.

Chennai 600 005.

# வேத காலத்தில் நெய்

- முன்னவர் சு. சௌந்தரபாண்டியன்,
எம்.ஏ., எம்.ஏ., பி.எட்., டிப்.வ. மொ. பிஎச்.டி
காப்பாட்சியர்,
அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்
சென்னை 600 005.

முதற்கண், ' நெய் ' என்ற சொல்லை ஆய்வோம்.

'நெ' என்பது வேர்ச்சொல். நெ+ய் = நெய்; ய் - சாரியை.

'நெ' எனும் வேர்ச்சொல்லுக்கு வகுத்துதல், தூக்குதல், பிழிதல் என்றெல்லாம் பொருட்கள் தமிழில் உள்ளன. இந்த அடிப்படையில்தான் 'நெம்புதல்' போன்ற சொற்கள் உருவாயின. வெண்ணெயை அல்லது கொழுப்பை வருத்தி உருவாக்குவதால் அதற்கு 'நெய்' என்ற சொல் வந்தது. எள் + நெய் = எண்ணெய் ஆனது. ஆவின் (பசுவின்) நெய், ஆநெய் என்று வழங்கப்பட்டது.

ஆ என்பது, பொதுவாக மாட்டைக் குறிக்கும். ஆயர் என்ற சொல், மாடு பராமரிக்கும் இனத்தாரான இடையரைக் குறிக்கும். ஆயன் - இடையன். சங்க இலக்கியத்தில் குறிக்கப்படும் ஆயண்டிரன் எனும் வள்ளல், இடையர் குலத்தவனே.

ஆய்+அண்டிரன் = ஆயண்டிரன். ஆய், என்பதன் வேர்ச்சொல், ஆ (பசு).

வேதகாலத்தில், வேள்விகள் செய்யப்பட்டன. இருக்குவேத மந்திரங்கள், அத்தகைய வேள்விகளுக்கான மந்திரங்களே.

இவ்வேள்விகள் குறித்து. கி.மு. ஆறாம் நூற்றாண்டில் ஜைமினி என்பவரால் எழுதப்பட்ட பூர்வ மீமாம்சை எனும் வடமொழி நூலில் நுவலப்பட்டுள.

இருக்குவேதம், பூர்வமீமாம்சை இவற்றின் அடிப்படையில், வேதகாலத்தில் (கி.மு.2000), இறைச்சியை வேள்வி நெருப்பில் பலியாக இட்டுள்ளனர் எனவும், அப்படி இடப்படும் இறைச்சியில் நெய்யைத் தடவி இட்டுள்ளனர் என்றும் அறியவருகிறோம். வேள்விக் குண்டத்தில் எரியும் நெருப்பை மேலும் எரியச் செய்வதற்காக நெய்யை அங்ஙனம் பயன்படுத்தியிருக்கலாம்.

இறைச்சியில் நெய்யைப் பயன்படுத்தினர் என்ற செய்தியிலிருந்து, சோறு போன்ற உணவிலும் வேதகாலத்திலேயே நெய்யை மக்கள் சேர்த்துக் கொண்டனர் என உய்த்துணரலாம்.

இன்றைக்கும் திருமணம் போன்ற சடங்குகளில் வளர்க்கப்படும் அக்கினியில் நெய் பெய்கின்றனர் என்பதை ஈண்டு ஒப்ப நோக்கலாம்.

வேதகால அந்தணர்கள் நெய்யோடு இல்லாது தொடர்பு கொண்டதால்தான் போலும்,

> ஆகாத்து ஓம்பல் என்று ஒரு பணி (கோ
> சம்ரக்ஷணம்) சில சாத்திர நூற்களில்
> அந்தணர்களுக்கும் ஏற்றிக் கூறப்பட்டுள்ளது.

எங்ஙனமாயினும், நெய்யின் பயன்பாடு வேதகாலத்திலிருந்தே இருந்து வந்துள்ளது என்பதை மேலே கண்டோம்.

# பழந்தமிழரின் அணைகட்டும் திறன்

- முனைவர் சு.சௌந்தரபாண்டியன்.

பழந்தமிழர்கள் கட்டடக் கலையில் வல்லவர்களாக இருந்தனர். ஆனால், கட்டடக்கலை வரலாறு எழுதும் மேனாட்டவர் எவரும் தமிழரின் இத்திறத்தைத் துளியும் குறிப்பதில்லை.

செம்பால் செய்தது போன்ற நெடிய சுவர்களை தலையாலங்காளத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனின் அரண்மனை கொண்டிருந்ததாக நெடுநல்வாடை கூறுகிறது.

இப்படிப்பட்டபழந்தமிழரின் கட்டடக்கலை மண்ணில் பறைசாற்றும் வகையில் அமைந்தது. அவர்தம் அணைகட்டும் ஆற்றலை வெளிப்படுத்திய பாங்கை ஆய்குவம்.

இராமேசுவரத்திலிருந்து இலங்கைக்குப் பாலம் கட்டும் திறனைக் கம்பர் எழுதுவது, தமிழரின் திறத்தை வெளிப்படுத்தியே எனலாம். வால்மீகியைப் பின்பற்றி நூல் யாத்தாலும், ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய தமிழர்களிடையே இருந்த அணைகட்டும் பொறியியல் நுட்பங்களையே (Engineering Technicalities) வெளிப்படுத்துகிறார் கம்பர் எனல் வேண்டும்.

**நுட்பம் 1:**

கடலுக்கு அடியில் அடித்தளம் (Foundation) போடவேண்டும் பெரும் பாறைகளைக் கொண்டு வானரங்கள் அமைத்தனவாம்.

" மண்ணுறச் சேற்றுட் புக்குச்
சுரிகின்ற மாலைக் குன்றம்" (சேதுபந்தனப்படலம் - 19)

என்று கூறுகிறார் கம்பர்.

**நுட்பம் 2 :**

பாலச்சுவர் கட்டும்போது, கற்கள் ஒழுங்குபட ஒன்றின்மேல் ஒன்றாக உட்கார வேண்டும் என்று காட்டுகிறார் கம்பர்.

" ஒன்றின்மேல் ஒன்று சென்றுஉக" (சேதுபந்தனப்படலம்-11)

**நுட்பம் 3:**

அவ்வாறு பாறைகள் ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்கப்படும்போது, இடைவெளி இல்லாதவாறு கிட்டித்து அமையவேண்டுமாம். வானரங்கள், இதற்காகப் பாறைகளை வெகுவேகமாகத் தூக்கித் தூக்கிப் போட்டனவாம்; அப்போது, பாறைச் சில்லுகள் தெறித்தனவாம்.

" சென்றுமே நிலைபெ றாது
திரிந்தன சிகரச் சில்லி " (சேதுபந்தனப்படலம் - 22)

**நுட்பம் 4:**

சிறிய கற்களைக் கடலலை உருட்டிவிடும் என்பதற்காக, பெரிய பெரிய பாறைகளைப் பயன்படுத்தினார்களாம்.

" விண்ட லந்தொடு மால்வரை வேரொடும்
கொண்ட லங்கொளி வீரர் குவித்தலால்"

(சேதுபந்தனப்படலம் - 26)

**நுட்பம் 5:**

பாலத்தின் உச்சிப் பகுதியை மட்டப்படுத்தி, அமர தளமாகச் செய்து, அதில் மணலைப் பரப்பிச் சீர் செய்தார்களாம். இந்த இறுதிப்பகுதியை வாரைத் தச்சன் நளன் தன் கையாலேயே செய்தானாம்! (சேதுபந்தனப்படலம் - 46).

**நுட்பம் 6:**

*கல்லால் பாலம் அமைந்தாலும், மரங்களும் பயன்படுத்தப்பட்டன. தேவையான மரங்களை வானரங்கள் வெட்டி வந்ததாகவே கம்பர் பாடுகிறார். (சேதுபந்தனப்படலம் 63, 64).*

**நுட்பம் 7:**

*ஆற்றல் மிக்க கடலை எதிர்த்து நிற்பதற்காகப் போதிய அகலம் கொடுத்து பாலத்தைக் கட்டினார்களாம். 100 யோசனை நீளமும், 10 யோசனை அகலமும் கொண்டதாம் அப்பாலம். (சேதுபந்தனப்படலம் 71).*

**நுட்பம் 8:**

*இலங்கையை நோக்கிக் கடலில் கட்டிய பாலத்திற்குச் செம்பராண் கற்களோ பிற மாவுக் கற்களோ பயன்படா. எனவே, பெரிய கருங்கற்களே பயன்படுத்தப்பட்டன என்பார் கம்பராயர். (சேதுபந்தனப்படலம் 5).*

**நுட்பம் 9:**

*பாலம் கட்டும் பணி மிக ஒழுங்காக ஒருவர் மேற்பார்வையில், அவரது ஆலோசனையின்படி நடந்ததாம். அந்த மேற்பார்வையாளர், வானரத் தச்சன் நளன். அவருக்கு உதவியாக நின்றவர்கள் மூன்று கோடி வானரங்கள். (சேதுபந்தனப்படலம் 8).*

*பழந்தமிழகத்தில் விசுவகர்மர்களே கட்டடம் கட்டுவதற்கான திட்டத்தை வகுத்துத் தருவர். அதை மனத்தும் கொண்டே, நளனைப் படைத்துக் காட்டியுள்ளார் கம்பர்.*

*இதைப்போன்றே, ஏறத்தாழ 600 ஆண்டுகளுக்கு முன்பு மதுரையில் வைகை உடைப்பெடுத்தபோது, அதை மிக எளிதாக அணைகட்டித் தடுத்தனர் என்று விளக்குகிறார் பரஞ்சோதியார்.*

உடைப்பெடுத்து நீர் ஊருக்குள் ஓடிவந்து கொண்டிருக்கும் போது, அதைக்கண்டு அஞ்சாமல், தம் மதி நுட்பத்தால், மிக எளிதாக, இன்னாருக்கு இன்னவேலை, இந்த இடத்திலிருந்து இந்த இடம்வரை, என்று ஓலையில் எழுதிப் பிரித்துவிட்டு, நீரை நிறுத்திக்காட்டினர் பழந்தமிழர் என்று விளக்குகிறார் பரஞ்சோதி தம் திருவிளையாடற் புராணத்தில்.

அதற்காக மரங்கள், தழைகள், திரிக்கப்பட்ட வைக்கோற் பழுதைகள், மணல் ஆகியவற்றைப் பயன்படுத்தினார்களாம் தமிழர்கள்.

குதிரைமரம் எனப்படும் மரங்களை ஊன்றி, வைக்கோற்பழுதை கொண்டு கட்டி, தழைகளைக் கொட்டி, மணலையும் கொட்டி, ஒருவகையாகப் பாய்ந்து வெள்ளத்தை எதிர் நின்று நிறுத்தினார்களாம்! இதைப் பரஞ்சோதியார் விளக்கினார்.

கிட்டு வார்பரி நிறுத்து வாரரவு
ருட்டு வாரடி கிடத்துவார்
இட்டு வார்தழை நிரப்பு வார்விளி
யெழுப்பு வார்பறை யிரட்டுவார்
வெட்டு வார்மண வெடுத்து வார்செல
வெருட்டு வார்கடிது துடுமைனக்
கொட்டு வார்தரை பரப்பு வாருவகை
கூடு வார்கறவை குழுறுவார்!

(மண் சுமந்த படலம் - 5)

மேற்பணிளெல்லாம் அரிமர்த்தன பாண்டியனின் ஆணைப்படி நடந்தன என்பார் பரஞ்சோதியார்.

இவ்வாறுள்ள பழந்தமிழர் தொழில் நுட்ப அறிவுகளையெல்லாம் அறிவியல் முறைப்படி ஆய்வு செய்து உலகோர் அறிந்திடுமாறு செய்தல் நம் கடனாகும்.

# தறி - சொல்லாராய்ச்சி

- முனைவர் சு. சௌந்தரபாண்டியன்,
காப்பாட்சியர்.

'தறி' என்றால், வெட்டுதல் என்று நாமறிவோம். 'கொலையாளியின் கையைத் தறித்துவிட்டான் மன்னன்' என்று எழுதுவார்கள்.

ஆடை நெய்வதில் உள்ள தறியில், வெட்டுதல் ஏதுவும் இல்லை. ஆடையைத் தறியில் நெய்து எடுத்தபின்தான் வெட்டும் வேலை எல்லாம்.

பின் 'தறி' என்ற பெயர் அதற்கு எப்படி வந்தது?

தறித்தல் என்றால் கட்டுதல் என்றும் ஒரு பொருள் உள்ளது.

'கட்டுத்தறி' என்றால், கட்டுவதற்குப் பயன்படும் முளை என்பது பொருள். ஆடு மாடுகளைக் கட்டி வைக்கும் முளைதான், கட்டுத்தறி. கம்பன் வீட்டில் இருந்த அம்முளைகூடக் கவி பாடும். என்று சொல்ல வந்தவர்கள், 'கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவிபாடும்' என்றார்கள். திருநாவுக்கரசர் இதே பொருளில்தான், " அடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே" என்று தேவாரத்தில் பாடினார்.

சிக்கெடுத்த ஒழுங்கான நூல் தொகுதியை நீளமாக ஒரு ஒழுங்கில் கட்டிவைத்துக்கொண்டால்தான், நெசவு செய்ய இயலும். எனவே, அவ்வாறு நூல் தொகுதியை நன்கு கட்டிவைத்துக் கொள்ளப்பன்படுவதால், அதற்குத் தறி என்று பெயர் வந்தது.

தறி = த + ற் + இ
த - வேர்ச்சொல்
ற் - எழுத்துப்பேறு
இ - உடைமைப் பொருள் விகுதி

'த்' எனும் வேர்ச் சொல்லுக்கு, கட்டுதல் எனும் பொருட்கூறு உள்ளது. அதனால்தான் அந்த வேரால், 'தளை' போன்ற சொற்களைத் தர முடிந்தது.

# HOLES IN THE PALMLEAF MANUSCRIPTS

## A NOTE OF RESEARCH OBSERVATIONS

Dr. S. Soundarapandian,
Curator,

On top of many palmleaf manuscripts, available now in India, one can find some small holes (fig. 1)




Fig. 1

Hitherto, it was thought that these were the holes through which worms, Gastrallus indicus, should have entered into the leaf bundle.

But, our research demies this.

Careful analysis of leaf bundles in which were found many holes on top, reveals that holes from top go down normally, upto the mid portion of the leaf (fig. 2). If the worm penetrates from top why should it stop in the middle?




Fig. 2

When many MSS were put into research, it has been noticed that these worms do take rest or reside in the middle. Such worms need air to breath. So, they find way either going down or moving up. It makes a path or groove which functions as a chimney. Eating the surrounding food (may be cellulose), it conveniently dwells in the same place. It gets enough air from the top hole it made. So, there is no need for it to find another way for air. This is the reason why we can not find, mostly, two ways or grooves on opposite sides running from a middle dwelling portion of a worm.

The worms have found their tube-like paths not only upwards, but in some cases downwards or sideways also (fig. 3).




Fig. 3

But, as noted above, one worm has dug out, in most cases, only one side groove either to top or to bottom or to side edge of lead bundle for air.

This find is corroborated by another of our keen observation that we were unable to identify even a single worm moving hither and thither sourrounding the leaf bundle. Since there is no moving of worms around the bundle, the possibility of penetrating the bundle from top is totally zero

Also, how can we account for small holes found in the sides (Fig. 4) of a leaf?




Fig 4

Again, while the worms, residing in the sides of leaf, pierce the leaves for food which process produces dot-like holes in the rear leaves (fig 5). It was wrongly considered hitherto that worms have pierced through the holes entering in one end and coming out the other like an arrow. If we follow a hole to find its origin, we will meet after that leaf or many leaves, a dwelling place of a worm. Actually, in one case, when a hole was followed carefully, it went through 19 leaves and ended in a place where a worm was quite nicely on its 'bed'!




Fig. 5

These observations, may lead one's research as to the origin and development of Gastrallus indicus in leaves and its various functions.

For example, it can be deduced from the above observations that the worm Gastrallus indicus develops only within the palmleaf manuscript and eggs of such worms may have entered into through dust.

This ultimately points out that removing of dust is very important in eradicating the worm Gastrallus indicus in leaves.

# தமிழ்ச் சுவடிகள் விவர அட்டவணை
# தொகுதி - 29

## பதிப்புரை

அ.கீ.சு. நூலகக் காப்பாட்சியர் டாக்டர். முனைவர் சு.சௌந்தரபாண்டியன் அவர்களுடைய வழி காட்டுதலால் இப்பணி நிறைவேற்றப்பட்டுள்ளது.

அ.கீ.சு. நூலகத் தமிழ்ச் சுவடிகளுக்கு இதற்கு முன்பு 28 தொகுதிகளில் சுவடி விவர அட்டவணைகள் வெளிவந்துள்ளன. தற்போது வெளிவருவது 29-வது தொகுதியாகும். இதில் சைவம், வைணவம், மருத்துவம், இலக்கணம் முதலிய பல பொருள்கள் அடங்கிய சுவடிகள் விளக்கப்பட்டுள்ளன.

சுவடித் துறைக்கு நான் புதியவனாதாலால் இதில் காணலாகும் தவறுகளைச் சுட்டிக் காட்டினால்தவறுகளைத் திருத்திக் கொள்வேன்.

இப்படிக்கு,
ச. தியாகராாசன்
தமிழ்ப்புலவர், அ.கீ.சு. நூலகம்
சென்னை 600 005.

# R. 8781
# கணித நூல்
# KANITHA NUL

Palmleaf; 35 x 25cm; Foll 1-35; Lines 7 on a page; Tamil; New; Much injured.

Extent 25000 letters.

Incomplete.

Astrological treatise explains various nuances in astrology in verses more than hundred. Author, not known.

**தொடக்கம்:**

*உலகொரு மூன்று ஏற்ற.. மறை நான்கும் எண்ணெண்*
*கலைகளும் தெரியும்.... பொற்புவனம் அறிவின் நீண்ட*
*புவனயீசர் பெருணெண்ணார் மலரடி பணிய....*

**முடிவு:**

*என்றது கோதில் மான்தலை, ரோகிணி, அசுவினி,*
*மூன்றும் அத்தம், சோதி, சித்திரை, பூசம்,*
*இரண்டும், அனுஷம், திருவோணம், அவிட்டம்,*
*இவைகளில் நல்ல... பஞ்சமி, சத்தமி,*
*திரியோதசி, துவாதசி இவைகள் நல்லது.*

**குறிப்பு:**

*இந்நூல் சோதிடத்தை விளக்குவது; சோதிடத்தில் கணிதங்களை நிர்ணயிக்கும் வழிகளைப் பாட்டு படிவில் கூறுகிறது. ஆசிரியர் பெயர் குறிப்பிடப்படவில்லை. நடப்பு உச்சம், நீசம், பாகை போல் பலவற்றை விளக்கிக் கூறும் இந்நூல் படிப்பதற்கு அரிதான வகையில் சிதிலமாயது.*

# R. 8782

# நீதி நூல்

# NEETHI NUL

Palmleaf : 36 x 2.2cms; Foll : 16; Lines : 4 lines on a page; Tamil; New injured; Extent : 4800 letters.

This work in 30 stanzas gives us varias morals of life. Author, not known.

**தொடக்கம்:**

*ஆஷ்த்தான கோலா கலநீதி ஆய்ந்துரைக்க*
*மாஷ்த்தான அம்பலத்தே வாசமாய்க் - கூத்தானாம்*
*சத்திசிவ காமிசவுந்தரியுந் தான் பயிறன்*
*அத்திமுக னேதமிழ்க் காப்பு.*

**முடிவுரை:**

*இடுக்கனா.. மைபேசி ஏற்பதும்.. செல்வம்*
*கெடுப்பதே மிகவும் நன்று குற்றமே அன்றி வாழ்வார்*
*தடுத்துடன் விளக்கி நோக்கும் தக்கு நோய் சூழ்ந்து*
*கடுக்கவே பிடவை தானும் உண்ணச்சோற றற்றுப்போமே.*

**குறிப்பு:**

*இந்நூலாசிரியரின் பெயர் தெரியவில்லை. நல்ல நீதிகளைக் கூறும் முப்பது பாடல்கள் உள்ளன. ஏடு சிதைந்துள்ளதால் பல சொற்களைப் படித்தறிய இயலாதுள்ளது. பாடல்களுக்கு உரையில்லை.*

# R. 8783

# சடாட்சரவந்தாதி

## SATACHARAVANTHATHI

Palmleaf : 36 x 2.5cms.; Foll.: 28; Lines : 5 lines on a page; Tamil; Old injured; Extent 5500 letters.

Incomplete.

This work in verse in praise of Lord Murga. Author, not known.

**தொடக்கம்:**

*சகலசன வசீகரமாம் சகாரத்தாலே*
*தனமுதலாய் அழைத்துவரு கரகாமத்தாலே*
*சிகமுதலாய் மோகிக்கும் அகாரத்தாலே*
*சிவமுதலாய் தம்மிக்கும் மகாரத்தாலே*
*பகைபசிநோய் அகற்றிவைக்கும் பகாரத்தாலே*
*பகைத்தவரை கொன்றுவரும் ஆகாரத்தாலே*
*இகபரமும் இரண்டுமெனக்கு அளித்தசோதி*
*எம்பிரான் சாட்சரத்தின் இயல்புதானே (7)*

**முடிவு:**

*முன்னிருப்ப தாரவன் முன்னிருப்பதாகும் முருகனெவனெ*
*என்னிருக்கும் ... இருளோ தெய்வம் வெகுளதோ*
*தன்னிருக்கும் தன்னில் தன்னிடமான அத்தன்மையை*
*போ...கு முன்னில்நான் உன்னிடத்தில் ஒடுக்கங்களோ (94)*

**குறிப்பு:**

*சடாட்ச்சர அந்தாதி என்னும் இந்நூல் சைவ சித்தாந்தை விளக்குவது. சரியை, கிரியை, யோகம் ஆகியவற்றை விளக்குவது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இச்சுவடியில் ஏழாம் பாடல் முதல் தொன்னூற்று நான்காம் பாடல் வரையே உள்ளது. இந்நூலகச் சுவடி D-250-ல் இதே நூல் வந்துள்ளது. அதன் குறிப்பும் காண்க.*

*இந்நூல் முருகக்கடவுளை புகழ்ந்துரைப்பது.*

# R. 8784

# வைத்திய நூல்

# VAIDDIYA NUL

Paper 21.2 x 33.5cms; Foll : 286 Lines 26 on a page; Tamil; Extent 14,872 letters.

Transcribed from the palmleaf of Mr. Jayaram pillai.

This book describes various Tamil Madicines of Asuva Munivar, Sambu Munivar, Vinthai Munivar and Vedamunivar.

**தொடக்கம்:**

## வில்வக் குழம்பு

*யொக்கவிடு கடுக வடியுதா*
*தோஷம் மாறும் உள்ளி*
*யாமணக் கெண்ணையே 24.... குரந்*
*தொட்டியின் வேரும்.... நன்றாய்....*
*பலமாய் பார்த்து நறுக்கி நன்னீர்*
*தூணியா படிப்புகட்டி எட்டொன்றாக்கி*
*யிறக்கி பிழிந்து கட்டி வெல்லம் பதினாறு*
*பலம் கரைத்து......*
......

**முடிவு:**

பலநோவுக்கு

**வெண்பா:-**

*மருக்காரை வேர்வேல் மரத்தோல் கோஷ்டங்*
*பருக்கடுக்ககாயி கருங்காலிப்பட்டை - நருக்கியே*
*நாளொன்றுய் தான் காச்சி னாலுநாள் கொப்பளிக்க*
*பாலன்பல் லாம்விருத்தன் பல்லு.*

....

....

**குறிப்புரை:**

*இந்நூலில் பல வகை நோய்களும், நோய்கள் தீருவதற்கான மருந்துகளும், அம்மருந்து செய்யும் முறைகளும் கூறப்பட்டுள்ளது. இந்நூலை அசுவ முனிவர், சம்பு முனிவர், விந்தை முனிவர் மற்றும் வேத முனிவர் ஆகியோர் எழுதியதாகக் கூறப்பட்டுள்ளது.*

# R. 8785

# யூகிமுனிவர் சிந்தாமணி - 500

## YUKIMUNIVAR CINDAMANI - 500

Paper : 30 x 21cms; Foll.: 24; lines on a page; Tamil, Old. Injured; Extent 84,000 letters.

Completed.

This work ascribed to Yakimuni describes in 500 stanzas various methods of preparing medicines and medical practices.

**தொடக்கம்:**

ஆனைமுகன் றன்பாதம் முருகன் பாதம்
அத்தியுரித் திடைதாரித்த அய்யர் பாதம்
வாலையுமை யவள்பாதம் மாலணி பாதம்
வைரவனறன் பாதம் மகாலட்சுமி பாதம்
காரணியாம் நாதாக்கள் ரிஷிகள் பாதம்
கமலத்தில் வீற்றிருந்த வாணிசரஸ் வதிபாதம்
கோனையா குருமுனிதாள் பாதம் போற்றிக்
கூறுகிறேன் ஆயுள்வே தத்தைத் தானே.

**முடிவு:**

விரும்புவான் அவனுக்கு விந்து கொஞ்சம்
விருப்பமாய் மனதினிலே ஆசை யுண்டு
தரும்புவாள் பாவம்தான் சுவார்சித்துப் படுவோன்யாரு
தைரியமில் லாதவன்போல் தாயார் சொல்ல
கரும்வுவான் கேட்டுமே நடப்பான் பாரு
கருணைபெ றமனையினிடவிரும் பான்பேச்சு
வரும்புதாள் தன்பேச்சு பெரிதா யெண்ணி
வருகுவான் பாதங்களு மென்று சொல்லே.

**குறிப்பு:**

யூகி முனிவர் திருவாய் மலர்ந்தருளிய சிந்தாமணி - 500 என்ற இந்நூல் வைத்தியம் பற்றிய குறிப்புக்களைச் செய்யுள் வடிவில் விள்கியுள்ளது. பலவகைச் சுரங்களுக்கு மருந்துகள், குளிகை, தைலம், மாத்திரை போன்றவை குறிக்கப்பட்டுள்ளன. நோயும் அந்நோய் தீர்க்கும் மருந்து வகையும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. மொத்தம் 500 பாக்கள் நூலில் உள.

# R. 8786 - 8788 (one codex)

Paper : 33.5 x 21.5cms.; pages 151; lines; 26 on a page; Tamil; Good; New; Extent 78,000 letters.

## R. 8786

## இரணகள வீரம்

## IRANAKALAVEERAM

Pages : 1 - 7; Extent 3640 letters.

Complete.

Restored in 1974-75 from a manuscript described under R.No.8628.

**குறிப்பு:**

*இந்நூல் மூவருர காட்டலாக்கு 8628 ஆம் எண்ணில் வருணிக்கப்பட்டிருக்கும் பிரதியைப் போன்றதே. அதன் குறிப்புங் காண்க.*

## R. 8787

## கணித நூல்

## KANIDHA NUL

Pages 13 - 148; Extent : 70,720 letters complete.

Restored in 1974-75 from a manuscript described under R.No.8641.

**குறிப்பு:**

*இந்நூல், மூவருட காட்டலாக்கு 8641-ஆம் எண்ணின் கீழ் வருணிக்கப்பட்டிருப்பதையே பிரதி செய்விக்கப் பெற்றது ஆகும். அதன் குறிப்புங் காண்க.*

# R. 8788

# கலைகள்

## KALAIKAL

Pages : 152 - 160; Extent 4160 letters; Complete.

Restored in 1974-75 from a manuscript described under R.No.8725.

**குறிப்பு:**

*இந்நூல், மூவருட காட்டலாக்கு 8725-ஆம் எண்ணின் கீழ் வருணிக்கப்பட்டிருக்கும் பிரதியினைப் பெயர்த்து எழுதப்பெற்றதாகும். அதன் குறிப்புங் காண்க.*

# R. 8789 - 91 (One Bundle)

Palmleaf : 39 x 4cms; Foll 1-27; Lines 14 on a page; Tamil; Injured; New; Extent 84,700 letters.

# R. 8789

# சட்டைமுனி-பின்-ஞானம் 100

## CHATTAIMUNI - PIN - GNANAM 100

Foll : 1 - 6; Extent 18,150 letters. Complete.

Same as that described under D.1841.

**குறிப்பு:**

*இந்நூல் டிஸ்கிருப்டிவ் காட்டலாக்கு 1841 எண்ணின்கீழ் விவரிக்கப் பெற்றுள்ள நூலே ஆகும். அதன் குறிப்புங் காண்க.*

# R. 8790

## சட்டைமுனி-முன்-ஞானம் 100
## CHATTAIMUNI - MUN - GNANAM 100

Foll : 7 - 12; Extent 19,800 letters complete.

Same as that described under D.1842.

**குறிப்பு:**

*இந்நூல் டிஸ்கிருப்டிவ் காட்டலாக்கு 1842 எண்ணின்கீழ் விவரிக்கப் பெற்றுள்ள நூல்போன்றதே ஆகும். அதன் குறிப்புங் காண்க.*

# R. 8791

## கொங்கணர் கடைக் காண்ட சூத்திரம் - 500
## KONGANAR KADAIKKAANDA SUDRAM - 500

Foll : 13 - 27;

Incomplete.

Same as that described under R.275 a (Palmleaf )

**குறிப்பு:**

*இதில் 251 பாடல்கள் மட்டுமே உள்ளன. இந்நூல் மூவட காட்டலாக்கு 275a-ல் விவரிக்கப் பெற்றுள்ள நூலே ஆகும்.*

# R. 8792
# சிவஞான போதம்
# SIVAGNANA POTHAM

Palmleaf : 21.3 x 3.3cms.; Foll : 156; Lines 6 on a leaf; Tamil; New; Injured; Extent; 74,880 letters.

Similar to the work described under D.No.1278 and 1282.

**தொடக்கம்:**

*சூத்திரமீ ராறினுக்குச் சூரணிமுப் பானொன்பா*
*னேத்தவெண்பா வெண்பா னிரண்டனைத்துஞ் - சேர்த்த தொகை*
*நூற்று முப்பான் மூன்றிவற்றை நுண்ணுணர்வி னாய்ந்துணந்தோர்*
*வேற்றுருக்கொள் ளாருறுவர் வீடு.*

**முடிவு:**

(க) *மும்மலங்களையுங் களைக.*
(உ) *சிவ ஞானிகளுடனே கூடுக.*
(ரு) *சிவஞானிகளையுஞ் சிவலிங்கத்தையும்*
*சிவனெனவே தேறி வழிவடுக.*
(சு) *வழிபடாமையே ஒழிக.*

**குறிப்பு:**

*இது திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்ட தேவர் அருளிச் செய்த சிவஞான போதகம். உரை நடையுடன் கூடியது. டிஸ்கிரிப்டிவ் காட்டலாக்கு 1278 மற்றும் 1282 ஆகியவற்றில் விவரிக்கப்பட்டுள்ளவற்றையும் ஒப்பு நோக்குவது சால சிறந்தது.*

# R. 8793

# பிரம கீதை முதல் அத்தியாயம்

# BRMAGEEDAI MUDAL ATTHIAYAYAM

Palm leaf : 21 x 4.5cms.; Foll 86; Lines 11 on a leaf; Tamil Old; Injured; Extent: 56, 760

Similar title of the work described under D.No.1579-82 (leaf)

**தொடக்கம்:**

*க- சூதமுனி அவதாரிகை - முற்கூறிய எ௱௲. வைபவ கண்டத்தின் முடிவில் உபநிக்ஷித்த பிரமான தாற்பறிய விருத்தியால் அறியத்தக்கதான பிரமாதம் ஐக்கியத்-துவ விஞ்ஞானத்திற்கு மோக்ஷகா தனத்திற்கு கூற்பட்டது.*

*.....*

**முடிவு:**

*..... சத்தியமாய் அங்கீகரித்து அவைகளை பிரதிபாலிக்கவில்லை பாரமாத்திக சத்தியமாக யாதொரு செகத்தினது ஞான முண்டோ அது மித்தையாக ஞானமான கைலாசம் சார ஏதுவாம் .... செகத்து மித்தை என்னும் யாதொரு ஞானம் உண்டோ, அது சம்சார நிமிர்த்தகமாம் என்று பொருள்.*

**குறிப்பு:**

*பிரமகீதை என்ற தலைப்பில் மொத்தம் பனிரெண்டு அத்தியாயங்கள் இச்சுவடியில் உள்ளன. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. பிரம்ம கீதை என்ற தலைப்பில் இந்நூலகத்தில்* D.No.1579 (ஓலை), D.No.1580 (ஓலை), D.No.1581 (ஓலை) *மற்றும்* D.No.1582 (ஓலை). *இச்சுவடியின் முதலிலும், இறுதியிலும் வெற்று ஏடுகள் உள்ளன.*

# R. 8794

# ஜீவன் முக்தி பிரகணம்

## JEEVAN MUKTHI PRAKARANAM

Palmleaf : 19 x 4cms.; Foll : 148; Lines : 11 on a leaf; Tamil; Old; Injured; Extent 1,23,728 letters.

Complete.

Same work as that described under R.No.4604, and R.6851.

**குறிப்பு:**

*இந்நூல், சிவன் முக்திப் பிரகரணம் என்னும் பெயர்த்து, முற்றுப்பெற்றது. இது, மூவருடக் காட்டலாக்கு R.4603 மற்றும் R.6851-ஆம் எண்களின் கீழ் வருணிக்கப்பட்டிருக்கும் பிரதியே ஆகும். அதன் குறிப்புக்களையும் காண்க.*

# R. 8795

# இந்திரசால நிகண்டு

## INDIRACHALA NIGANDU

Palmleaf : 22.7 x 3cms; Foll : 56; Lines 7 on a leaf; Tamil: Old; Injured; Extent 36,890 letters.

Incomplete.

This work in 202 Stanzas, speaks mainly Yoga. Author not known.

**தொடக்கம்:**

தானென்னும் வழலை யாதி
தருகரு வடீயீசன்
வானமும் புவியும் ஆகி
மதிரவி வெளியில் நின்ற
ஞானமும் ஆகி அம்மை
நாதமும் விந்து ஆகி
மோனமும் ஆகிநின்ற
முடிவுரு மகா பூதத்தானே.

**முடிவு:**

பாரினில் இந்த துரைப்பாம்
பாத்து தேறான்
பாவம் செய்ய வேண்டாம்
ஆருநீ பாரும்
அற்பத்தினாலும் மேறிரு
நூறு நிகண்டதும் உரைமுறை

(202)

**குறிப்பு:**

கருரான் வாதகற்பம் 107 என்ற சிறு நூலும் உள்ளது. இராமதேவர் நூலும் உள்ளது. அகத்தியர் துடி நூல் 11 என்ற நூலும் உள்ளது. மேற்படி இந்திரசால நிகண்டில் 202 விருத்தங்கள் உள்ளன. ஆசிரியர் பெயர் குறிக்கப்படவில்லை.

# R. 8796

# எந்திரச் சுவடி

# EANDIRACH CHUVADI

Palmleaf: 33.5 x 2.5 cms Foll: ; Lines 8 on a manuscript; Tamil; Old; Injured; Extent letters.

This manuscript deals with manthras for curing dieases and other purposes. Diagram are also present. Author is not known.

**தொடக்கம்:**

.... இவ்வெந்திரம், பாம்புக்கும், பேய்க்கும்
தலைநோக்காட்டிற்கும் வரைந்து கட்டவும்,




**முடிவு:**

| | | | | |
|---|---|---|---|---|
| ம | ந | ய | வ | சி |
| வ | சி | ம | ந | ய |
| ந | ய | வ | சி | ம |
| சி | ம | ந | ய | வ |
| ய | வ | சி | ம | ந |

Colophon:- இந்த பொஸ்தகத்தில் எயந்திரம், மந்திரம், குணவாகடம், நாடிப் பரிட்சை இது முதலாகியதும் இருக்கு என்று அறியவும்.

**குறிப்பு:**

நோய்யும், நோய்தீர மந்திரமும், நோய்க்குத் தக்க எந்திரங்களைப் படங்களுடன் விளக்கப்பட்டுள்ளது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

# R. 8797
# இலட்சண விருத்தி
# ELATCHANA VIRUTHI

Palmleaf: 22.2 x 3.7cms.; Foll : 72; Lines 9 on a manuscript; Tamil; Old Injured; Extent 51,840 letters.

This manuscript gives us 108 names with description.

Author not known.

**தொடக்கம்:**

*நிருவிகாரி - அன்னமயகோசம், நாமல்லாத படியினாலப் பிறப்பிறப்பு, நரைதிரை வாவிய மேவ பன்ன மென்கின்ற விகாரம் நமக்கில்லை. பிராணமயகோசம் - நாமல்லாத படியினாற் பலவான், பலவீனன், பசித்தாகஞ் சொன்னவன், சொல்லாதவன், கொடுத்தவன் வாங்கினவன், போனவன், வந்தவன் என்கின்றது முதலான விகாரம் நமக்கில்லை.*

**முடிவு:**

*.... ஒரு திக்கிலேயுண்டு, ஒரு திக்கிலே இல்லை, என்கின்ற திக்கு பரிச்சேதம். ஒரு வண்ணத்திலே உண்டு, ஒரு வண்ணத்திலே இல்லை என்கின்ற வண்ண பரிச்சேதம். ஒரு ஆச்சிரமத்திலே உண்டு ஒரு ஆச்சிரமத்திலே இல்லை என்கிற ஆச்சிரம பரிச்சேதம் இது முதலானது இது எல்லா மில்லாதது, எட்டுத்திக்குக் கீழ் மேலெங்கும் அடிமுடியற்று... பூரணமாயிருக்கிற படியாலே ... னனறறி கஉயசஉ.*

**குறிப்பு:**

*இந்நூல் மிகவும் சிதிலமாயது. பஞ்சகோசம் பற்றி கூறுகின்றது. நூலின் இறுதிப் பகுதியில் கடவுள் தோத்திர நாமாவளி உள்ளது.*

# R. 8798
# செங்குந்தர் திருக்கை வழக்கம்
## SENGUNDAR THIRUKKAI VAZHAKKAM

Palmleaf : 33.3 x 2.2 cms.; Foll : 35; Lines 4 on a leaf; Tamil; Old; Injured; Extent 7,000 letters.

**தொடக்கம்:**

*.... டிகள் பாச்சிய செங்கை யொன்னார் முது கு*
*.... தின் பாவாடை வீசிய கற்பகக் கை*
*... செங்குந் தகுலத் தியர் - தந்திரக் கை*
*... கெதிர் வக்கணைத் - தெழுதுங் கையோ...*

(எ)

**முடிவு:**

*அழகாபரண .... யுந்திருக்கை யருந்ததி கண்*
*டழகா மென்றெண்ணு வளென்றே கவிதை யணிமணிக்கை*
*யழகார் மதனை யுறுவிலி யாமென் றகற்று செங் கை*
*யழகாதி கச்சி நவின்றார் செங்குந்த ரன்றக்கையோ*

எ.சா.

**குறிப்பு:**

இச் சுவடி செங்குந்தர் இன மக்களைப்பற்றி பாடுகின்றது. முதற் சில சுவடிகள் சிதிலமாக உளது. கை, கை என முடியுமாறு பாடப்பட்டுள்ளது.

# R. 8799

# பெயரகராதி

## PEYARAGARATHY

Palmleaf : 29.3 x 3.3cms.; Foll : 69; Lines 8 on a manuscript; Tamil; Good; Old; Extent 33,120 letters.

This manuscrips describe meanings for plants, medicine and animals.

**தொடக்கம்:**

*அகம் என்பது கெந்தகம்*
*அகத்தி என்பது 2 பால முலைப்பால்*
*அருகம் என்பது அகிலக்கட்டை*
*அகிமார் என்பது வெள்வேள்*
*அக்குவா என்பது பலகாரம்*
*அக்காளம் என்பது உள்வயிரமுள மரம்*
*அக்கம் என்பது தாணிக்காயிகன்.*

**முடிவு:**

*வறிவி என்பது கடிகை*
*வறுடை என்பது ஆடு*
*வறுடகம் என்பது முடக்கொத்தான்*
*வறுக்கை என்பது துலாமரம்*
*வறுணம் என்பது தண்ணி*
*வறுந்துறு என்பது கொங்கு*
*வானார என்பது முங்கில்*
*வலக்கொண்ணை என்பது குப்பமேணி*
*வலம்பிறி என்பது நந்தியாவடம்*
*வல்லி என்பது கொடிமருந்து*
*வல்லறி என்பது தலை துளிர்*
*ஆக அக குதி எழுதி முகிழ்ந்தது முற்றம்.*
*குறுவே துணை, சுப்பிறமணியன்றுணை.*

**குறிப்பு:**

*இந்நூல் பெயரகராதி ஆகும். மரம், செடி, விலங்குகள் ஆகியவற்றின் பெயருக்கு அர்த்தங்களை விளக்குவது.*

# R. 8800

# ஞானபூசை அட்டவணை

# GNANAPOOSAI ATTAVANAI

Palmleaf : 29.5 x 4.7cms.; Foll : 7; Lines 11 on a page; Tamil; Old; injured; Extent 7,074 letters; Complete.

Methods of Siva worship; Author for this prose is not known.

**தொடக்கம்:**

*ஞானாசாரியருடைய திருவருளினாலே திரி-*
*பதார்த்த சாத்திரத்தை யறிந்ததினாலே சிவஞானத்*
*தை யடைந்து ஞேயத்தைத் தெரிசித்த பேர்களே*
*ஞான பூசை பண்ணத்தக்கது.*

**முடிவு:**

*...... நிஷ்க்களமாய் நின்மலமாய்*
*நித்திய மாயிருக்கிற சிவனைத் தியானித்திப்*
*பெட்டகக் கோவிலி லெழுந்தறப் பண்ணி*
*பீடத்திலே தன்னுடைய குருவை யாசனலேர்த்தி*
*மூலத்தாலற்சித்துப் பாத்தியாசமன வற்கியங்*
*கொடுத்துப் பூசித்துத் துதித்து வணங்கி யுத்தியா*
*பனம் பண்ணியற்கியங்களை யோசிக்கக் கடவன்.*
*பரம கல்லியாணமாய் நிஷக்களமாய், நின்மலமாய்ப்*
*பிரவு வாய்ச் சிதானந்தமாய், நித்தியமாய்ச் சோதி*
*ரூபமாயிருக்கிற சிவனைத் தியானம் பண்ணவுமிந்த*
*நெய்வேத்திய, நிர்மாலிய மல்லாதான் கையினாலே*
*பொசித்தற்குயே.... யெமென வறிகயகதிமானாகிய*
*நானிந்தப்படி ஞானத்தைக் கொடுப்பதாகிய பூசையைப்*
*பண்ணக் கடவன், இம்மையிலே இதுவாது ...*
*கமத்திலிருப்பின் பாதத்திலே ஞான பூசைப் படலப்*
*பிறகாரஞ் செய்த வட்டவணை யெனமெறிக.*
*நமச்சிவாய சேதிகன் றிருவடிவாழ்க. ஞான பூசை*
*யட்டவணை முற்றும்.*

Colophon:-

*சுபானு வருஷம் ஆனி மாதம் 24-ஆம் தேதி சுக்கிர வாரத்தின்று எழுதி முடிந்தது. ஞான பூசை அட்டவணை. முற்றும். திருக்கைலாசப் பரம்பரை திருவாவடுதுறை யாதீனம் திருநமச் சிவாய மூர்த்திகளது திருமரபில் பதினாறாவது பட்டத்திலெழுந்தருளி யிருக்கும், சுப்பிரமணி தேசிகன் திருவடி வாழ்க. சபாபதி பூசை சிதம்பர நாத தம்பிரானுடையது. திருவாவடுதுறை.*

**குறிப்பு:**

*இந்நூல் சிவ வழிப்பாட்டு முறைகளைக் கூறுகின்றது. சிவ வழிப்பாட்டு மந்திரங்களையும், ருத்திராட்சம் அணி முறை ஆகியவைகளைப் பற்றி கூறுகின்றது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. உரை நடை முறையில் அமைந்துள்ளது.*

## R. 8801

## வசியத்துக்கு மருந்து

## VASIYATHUKKU MARUNDU

Palmleaf : 23.2 x 3cms; Foll : 24; Lines 6 on a page; Tamil; Old: Injured; Extent 11,000 letters; Incomplete.

This work describes various medicines for attracting ladies, men and children.

**தொடக்கம்:**

*நல்ல பாம்பைப் பிடித்து கழுத்தை அறுத்து*
*ணாகூம ஆமை கண்முளி 2-ம் பெய்த்து*
*அரைத்து திலகமிட பெண் வசியூ ... ரில*
*வாகை வெரெப்பி மங்கி பெட்டணம்*
*துடியிடை வாளை*
*கிழங்குக்குள் வைத்து யெட்டான இலை*
*எடுத்து அரைத்து சாறுவிட்டு அரைத்து*
*அதில் சுரணம் பிள்ளை வசியம்.*

**முடிவு:**

*பச்சியிலப் பூச்சி பசும் பூச்சி பயிரிலே*
*பூந்து தின்னால் குடியான பெயர்கள் கோவித்துக்*
*கொண்டு, கோவையாரிடம் சொல்லுவார்*
*கோவையாரெழுத்திருந்து நின்றிருத்தி*
*வருகுராா் சூலமேந்தி வருகிற நிற்பது*
*உண்டு. நிழலிலே கிடக்காதே.*
*எழுந்திருச்சுப் ெ - யி வாயிருந்தால்*
*ஆச்சாப் .... பெரப்போ மகெய*
*அளிசாவெண்டாம நாருத மகாமுனி*
*..... கந்துபெபாக சிவா உருது சூச்சாரம்*
*பின்னாலெயிருக்கிறது. 2.*

**குறிப்பு:**

*இந்நூலில் ஆண், பெண், ஆகியோரை வசீகரிப்பது பற்றிய செய்தியும் அதற்குண்டான மந்திரம், எந்திரமும் விளக்கப்பட்டுள்ளன. புதையல் எடுப்பது பற்றி கூறப்பட்டுள்ளது.*

# R. 8802

# சௌந்தரிய லகரி

# SOWNDARIYA LAKARI

Palmleaf : 23.6 x 3.4cms.; Foll: 60; lines 6 on a page; Tamil; Old; injured; Extent 23,760 letters. Complete.

This work describes Devi's (Goddess) qualities in stanzas.

**தொடக்கம்:**

*மொழிந்தமறை நூலியற்று முகபடா மணிந்துமுது*
*ஞான தானம்*
*பொழிந்துதன திணைமணியென் றிருசுடரும் புனைகளிற்றைப்*
*போற்றல் செய்வோம்*
*வழிந்துபெரும் புனல்பரந்து வடவரையிற் றுலகேழு*
*மேழு மொக்க*
*வழிந்திடினு மழியாத வபிராமி பாடல்வள*
*மளிக்க வென்றே.*

**முடிவு:**

*வேத நுண்பொரு ளாதி சுந்தரி*
*வீற டங்கலு மாயமே*
*யீத றிந்து விடாசொ லுங்கவி*
*ராஜ பண்டிதன் வீரையா*
*னாத ரஞ்சகி தாள்பெ றுந்திரு*
*நாம மொன்பது நூறுமே*
*யோதி னன்பல போக முஞ்சிவ*
*லோக மும்பெறு வார்களே.*

Colophon:-

*பாயிரத்தில் இந்நூலுக்கு பெயர் சௌந்தரியலகரி யென்று சொல்லப்பட்டதாயினும் இதுவரையுஞ் சொல்லப்பட்ட பாட்டுகளினா தேவியினின்பப் பெருக்கைச் சொல்லுதலால் ஆனந்தலகரி யென்றும் பின்வரும் பாட்டுகளால் அவளழகின் பெருக்கைச் சொல்லுதலால் சௌந்தரிய லகரி யென்றும் வழங்கு மென்றறிக. லகரி யென்பது வெள்ளம்: உ.*

**குறிப்பு:**

இந்நூல் சௌந்தரிய லகரி மூலத்திலிருந்து தமிழாக்கி எழுதப்பட்டது. இந்நூலாசிரியர் சென்னப் பட்டணம் விவேகக் கல்விச் சாலைத் தமிழ்த்தலைவராகிய சரவணப் பெருமாளையராவார். தி.விசாகப் பெருமாளையரது கல்வி விளக்க அச்சுக் கூடத்தில் அச்சிடப்பட்டுள்ளது. இதில் சில வெற்று ஓலைகளும் உள்ளன. முற்றும் உள்ளது.

# R. 8803
# அகத்தியர் சூத்திரம் 300
## AGATTIYAR SUTTIRAM 300

Palm Leaf 24.5 x 3 Cms; Foll: 76

Lines 7 on a page; Tamil; Injured; Old; Extent 3.452 letters

Complete.

This work is same as that described under R.no.7022

**தொடக்கம்:**

பூதலத்தில் தென்பொதிகை தன்னில் வாழும்
பூரணமே யென்குருவே சின்மயா பேரறி அய்யா
மாதவத்தா லட்டசித்தி யெட்டும் பெற்ற
வரிசையினால் வயித்தியனூல் வகையாய்ச்சொல்வேன்
போதகத்தின் முகத்தானை கடைக்கோட்டானை
புழுக்குழியில் விழுந்தானைப் புதல்வன் றன்னைச்
சாதகமாய் மனமடங்கி அறிவிற் கூடித்
தறபர நாயநின்ற கணபதியே காப்பாம்

(க)

**முடிவு:**

மூலத்தினை முத்தாலே மவுனங் கொண்டு
    முட்டினாலே வடுகனங்கே நிறதஞ் செய்வான்
ஆவத்தின குண்டலிக் குளடுக்கைப் பாரு
    ஆசையவன் வைப்பதற்கு வடமாலை சாற்று
சீலத்தின் நந்தியுடை பூசைப் பண்ணு
    செகண்டி னாதவொலி மணியி னோசை
காலத்தின் கருவறிந்து பூசை செய்தால்
    கைக்குள்ளா மவயித்திய முன்னூறு முத்தே

(ஙளக)

Colophon:-

அகத்தீசர் துறை. அகத்தியர் சூத்திரம் முன்னூறு எழுதி முடிந்தது. முற்றும். உ மணளூர் முத்து குமரப்ப முதலியார் குமாரன் பரசு மன் சுகசந்தலிகிதம் உ சிவமயம் உ

**குறிப்பு:**

இந்நூல் R.7022-ல் உள்ளதைப் போன்றதே. முற்றும் உள்ளது. மேலும் இச்சுவடிக் கட்டில் வில்லாத்தி லேகியம், கந்தனாதி தைலம் தாம்பூல பிற்பம் போன்றவற்றிற்குரிய செய்முறை அடங்கியதனி ஓலைகளும் உள்ளன.

# R. 8804

# பாகவதத் திரட்டு

## BHAGAVADA THIRATTU

Palm leaf: 19.4 x 3 cms; Foll: 129; Lines 8 on a Page; Tamil; Old; Much injured; Extent 1,10,432 letters.

1 Complete.

1 Printed.

This book contains stanzas relating to the famous work Bhagavatham.

**தொடக்கம்:**

*கிருட்டிண சகாயம் பாகவத திரட்டு பாயிரம்*
*சீர்பூத்த பரஞ்சுடராய்ச் சித்தாகிக் கானலிடை*
*நீர்பூத்த தெனவுலக நிறைந்தொளி தன்பாற்தோன்ற*
*ஏர்பூத்த முத்தொழிலு மினிதியற்றித் தனிநின்ற*
*கார்பூத்த திருமேனிக் கடவுண் மலரடி நினைவாம்.*

**முடிவு:**

*கனைத்துவண் டிமிர்துழாய்க் கண்ணன் மாக்கதை*
*மன்துற வழங்குநர் மகிழ்ந்து கேட்குநர்*
*வினைத்திருக் கற்றுறு மெய்ம்மை யாயதியா*
*நினைத்தன பெற்றிவணீ டுவாழியே*

Colophon:-

*உகந்தம்ததியாயம் பாடல் விவரம்.*

**குறிப்பு:**

*பாகவதப் பாடல்களின் தொகுப்பாக உள்ளது. அச்சிடப்பட்டுள்ளது. இறுதியில் அத்தியாயமும் பக்கமும் அட்டவணையாகக் குறிக்கப்பட்டுள்ளன.*

# R. 8805

# பட்டணத்து சுவாமிகள் புலம்பல்

## PATTANATHU SWAMYKAL PULAMPAL

Palm leaf : 20.1 x 3.4 cms.; Foll: 38

Lines 8 on a page; Tamil; Old Injured; Extent 25,536 letters.

Complete.

Printed.

This manuscript contains the stanzas composed in praise of God Siva. Author, Pattinathar Swamy.

**தொடக்கம்:**

கன்னிவன நாதா - கன்னிவனநாதா
மூலமறியேன்; முடியு முடிவறியேன்
ஞாலத்துட் பட்டதுயர் நாட நடக்குதடா?
அறியாமை யாமலாத்தா லறிவு முதற் கெட்டனடா!
பிறியா வினைப்பயனாற் பித்துப் பிடித்தேனடா!

**முடிவு:**

வரிசைகெடாம லெடுமெனவோடி வந்திளமைந்தர்கு
னிந்துசுமந்து கடுகிநடந்து சுடலையடைந்து
மானிடவாழ்வென வாழ்வெனநொந்து -
விறகிடமுடி யழல்கொடுபோட வெந்து விழுந்துமு
றிந்துநிணங்க ளுருகியெலும்பு கருகியடங்கி
யோர்பிடி நீறுமி லாதவுடம்பை -
நம்புமடியேனை யினியாளுமே.

| | |
|---|---|
| முதல்வன் முறையீடு | (எயஉ) |
| அருட்புலம்பம் | (ளயள) |
| இறந்தகாலத்திருங்கல் | (யச) |
| நெஞ்சோடு புலம்பல் | (ஙயள) |
| பூரண மாலை | (ளஉ) |
| நெஞ்சோடு மகிழ்தல் | (ஙஉ) |
| வண்ணத்தின் கலை | (சு) |

**குறிப்பு:**

இந்நூல் பட்டினத்தடிகளால் இயற்றப்பட்டது; சிவபெருமானைப் பணிந்து எழுதிய நூல், முற்றும் உள்ளது. பதிப்பிக்கப்பட்டுள்ளது. இச்சுவடியின் இறுதியில் அத்தியாயப் பட்டியல் உள்ளது.

# R.8806

# பிள்ளைகளுக்கு சருவ தோஷத்துக்கு மந்திரம்

# PILLAIKALUKKU SARUVA THOZHATHUKKU MANDIRAM

Palm leaf: 18.7 x 2.8 Cms.; Foll: 26;

Lines 7 on a Page; Tamil; Old Good; Extent 7,980 letters.

This manuscript describes various mandras to avoid 'Thosha' (disease) with diagrams of Yandras., Author not known.

**தொடக்கம்:**

*பிள்ளைகளுக்கு கருவ தோஷத்துக்கு மந்திரம்*
*ஓம் மதகிரி மரிபூதணுசி*
*பூத தத்துவ பூசணி அஷக்தம்*
*சூஷத்திரம் றணடிபம்*
*சருவ தோஷ ஹுசியா ஹுசியா*
*உச்சாடு உச்சாடு*
*ஓம் சங்கயநதிரி சங்கயயேந திரி*
*சூலம்-திரி சுடு காட்டுதிரி*
*ஓம் திரி திரி சுவாகர*
*- உ இதுக்கு சாந்தி -*
*கருங்கோழி கொண்டு வந்து தாயும்*
*பிள்ளையும் சுத்தி பலியிட்டு*
*உரியனும் உரிச்சி தாயிக்கும்*
*பிள்ளைக்கும் சுத்தி ஊருக்கு கிழக்கே*
*எருக்கஞ் செடியை முக்காலச் சுத்தி*
*எருக்கஞ்செடியில் வைக்கனும். திரும்பி*
*பாராமல் வரனும்.*

**முடிவு:**

யத்திரகாளி சக்கரம்:



**குறிப்பு:**

இந்நூலில் தொடக்கத்தில், இடையில் முடிவில் ஏடுகள் இல்லாமலுள்ளது. குழந்தை நோய் தீர்க்க மந்திரம் எந்திரம் உள்ளன. ஆசிரியர் பெயர் இல்லை.

# R. 8807

# நிர்வாண தீட்சா அந்த்யேஷ்டி விதி
## NIRVANA DEETCH ANTHYESTY VITHY

Palm leaf: cms.; Foll:

Lines on a Page; Tamil and Grandha; Old; Injured.

Complete.

This book deals with , mantras and other details of Saiva Agama. Author not known.

**தொடக்கம்:**

*அந்த்வசுத்தி சகிதமான அந்தியேஷ் பண்ணும்படி*
*முன்பு போல எல்லா கிரியைகளையும்*
*நாபி சந்தான மா. வாகப்பண்ணி முடித்து*
*முன்னுற் கொண்ட நூலினாலே மூன்றாக*
*மடிக்கப் பட்டிருக்கின்ற பாச சூத்திரத்தை*
*கத்தரியுடனே. கழுவி ப்ரோ க்க நெறிக்ஷனா*
*திஷீத்தி.*

**முடிவு:**

*தேவனை விஷே பூசைப்பண்ணி*
*வேறேயொரு கிரகத்திலே சமைத்து*
*வந்த ஆகாரத்தை அபரா...த்திலே*
*ரஸ வர்ஜிதமாக பிராணாதாரமாகக்*
*கொள்ளுவான். இதி நிர்வாணா*
*ந்தியேஷ்டி விதி சமாம்தம்.*

Colophon:-

*சர்வ ஷித்தி வருஷம் மாசி மாதம் 26ம் தேதி... தாரன முனாம் தெருவிலிருக்கும் தியாகராச செல்லையா பட்டாரகர் குமாரர் கணபதி பட்டார அர்சுவ அஸ்த லிகிதம்.*

**குறிப்பு:**

*சைவ ஆகம விதியை சார்ந்த நூல். தோத்திர மந்திரங்களும் பொருள்களும் விளக்கமாக கூறப்பட்டுள்ளன. ஆசிரியர் பெயர் குறிப்பிடப்பட வில்லை. மணிப்பிர வாள நடையில் அமைந்துள்ளது.*

# R8808

# கலைக்கியானம் சாலத்தில் சித்து அம்பதுக்கும் பேர்

# KALAIKKYANAM CHALATHYTHIL CHITHU AMBADUKKUM PER

Palm leaf: 11-10 x 3.2 cms.; Foll: 61

Lines 10 on a Page; Tamil; Old ,Injured ; Extent 28,940 letters.

Incomplete.

This book consists of tricky tantras. Author not known.

**தொடக்கம்:**

1. மதிபொருந்தி வளருகின்ற சூட்சந்தன்னை ..க்கமுடன் தனை யறிந்து வணங்சினாகால்

2. பதி யழுந்த யெட்டு ரெண்டு மோனமுத்துக் சூடிப் பேசின் திசை வாய்வு. ஆகாரபீடம்

3. விதிப் பயனை யறிந்து கூடப்பொறா

4. அதியனே கந்தம்

**முடிவு:**

தாபமென்ற தேங்காய் தான் உருண்டதாலே
சபையில் நின்ற மூடர்கள் தான் அதிசயமாய் பார்த்து
ரூபம்மென்ற தேங்காய்த்தான் மந்திரத்தின் விசையால்
நொடிக்குமுன்னே வெகுசுத்தாய் சுத்தும் அய்யா
கோபமில்லா புலத்தியனே அய்யா அய்யா
கூறுகெட்ட எலியிருந்த.....

**குறிப்பு:**

இந்நூலில் சித்துக்களைப் பற்றிய செய்தி உள்ளது. இதம்சித்து, பிரையதிக சித்து, அங்கிசத்தின் சித்து, பிரம்ம குலச் சித்து, பெண்மயச் சித்து போன்றவை விளக்கப்பட்டுள்ளது. முற்றுப்பெறவில்லை. ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

# R. 8809

# மகாவிந்தம்

# MAHA VINDAM

Palm leaf: 21.50 x 3.4 cms.; Foll: 21

Lines 10 on a Page; Tamil; Old ,Injured; Extent 20,160 letters.

Incomplete.

Same work as D.No.531 (leaf)

**குறிப்பு:**

இந்நூல் D.No.531 (ஓலை) போன்றதே. முற்றுப் பெறவில்லை.

# R. 8810
# கல்நார் பஸ்பம்
# KALNAAR BUSPAM

Palm leaf: 24 x 4.1 cms.; Foll: 7

Lines 5 on a Page; Tamil; Old ,Injured; Extent 2,100 letters.

This manuscript deals with medicines for human diseases.

**தொடக்கம்:**

*எருகம்பூவு மூணு, களிசல் காயி, மத்திரி*
*வெல்லமும் சேர்த்து அரை மண்டலம்*
*நூக்தி செலறிதிது சுக்கு, திப்பிலி, மிளகு*
*மூன்றும் பொடி செய்து சர்க்கரை கலந்து*
*ஏழு நாள் கொள்ளவும். வாயில் ரத்த வாந்தி*
*நிற்கும்.*

**முடிவு:**

*இச்சாபத்தியம்*
*வாயில் ரத்தம் விழுவதும் கண்ணில்*
*ரத்தம் சேர்ந்திருப்பதற்கு*
*சடாமுடி! முத்தின மரத்து வேப்பம் பட்டை,*
*பாப்பாற முள்ளிவேரு, காயிமுள்ளி வேரு,*
*பரங்கி சக்கை, அதிமதுரம், திப்பிலி,*
*பொங்க வைத்து*
*கியாசம் சாப்பிடவும்.*

**குறிப்பு:**

*இந்நூல் நோய்களுக்கு ஏற்ற மருந்தும், பத்தியமும் கூறுகின்றது. இறுதி ஓலையில் கன்னடத்திலும், தெலுங்கிலும் வைத்தியம் கூறுகின்றது.*

*ஆசிரியர் பெயர் தெரியவில்லை.*

